உ

சிவமயம்.

கோம்பை ஜமீன் மரபினர் ஸ்ரீமாந்
கன்னப்ப கவுடர் அவர்கள் குமாரரும்
சிவபிரான்யமக வந்தாதி, மாலை மாற்று சித்திர
கவிகள், அரிச்சந்திர வெண்பா, கர்வகானகுடாரி
முதலான நூல்களின் ஆசிரியரும் சித்திரகவி
வித்துவானுமான ஸ்ரீமாந்

க. திருமலைஜக்கையகவுடர் அவர்கள்

இயற்றியருளிய

# பக்திரச பஜனாமிர்தம்.

இது

கோம்பை ஜக்கதேவி கருணைவிலாச வித்தியாசாலை
ஆசிரியர் மானேஜரும், தமிழ் நாடு சுரபி ஒக்கலிகர
மகாஜன சங்கக் காரியதரிசியும், மதுரைத் தமிழ்ச்
சங்க அங்கத்தினருமான வரகவி

R. திருமலை ஜக்கையா கவுடரவர்கள்

முயற்சியாலும்

பல புண்ணிய புமான்களின் பொருளுதவியாலும்

மதுரை மீனலோசனி அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

ருத்ரோத்காரி ௵
1924

இரண்டாம் பதிப்பு.] — [காப்பிரைட் ரிஜிஸ்டர்டு.




R· திருமலைஜக்கையா கவுடர்·

# முன்னுரை.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

அகர முதலாகிய எழுத்துக்கள் சமஸ்தமும் உலகத்தினிடை இறைவனை முதலாவதாகக் கொண்டிருப்பதுபோல நூல்கள் சமஸ்தமும் முன்னுரையை முதலாவதாகக்கொண்டிருக்க வேண்டியது மிகமிக அவஸ்யமே. "பாயிரமல்லது பனுவலன்றே" என்றார் பவணந்தியும்.

ஆக்கல் அளித்தல் அழித்தற்குடையவனாகிய இறைவனுக்கு இன்பத்தைத் தருவது இனிய கீதங்களென்பதை எவரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள். இத்தகைய கீதங்கள் இறைவன் பேரிலும் அவரது அம்சத்தையேற்ற அரசர்கள் பேரிலும் அளவிடற்கரிதாக இயற்றி வெளிவந்து உலவுவதை யாவரும் அறிந்திருக்கக் கூடும்.

இவ்வுலக வாழ்விற்கு இன்பத்தையும் அவ்வுலக வாழ்விற்குச் சுகத்தையும் அளிப்பது பாமாலைகளேயாகுமென்பதை உணர்ந்த காலஞ்சென்ற சித்திரகவி வித்வான் கோம்பை க. திருமலை ஐக்கய கவுடரவர்கள், பஞ்சகிருத்யங்களுக்கும் கர்த்தாவாகிய சிவபிரான் பேரில் யமகவந்தாதிநூல் ஒன்றும், சிவபஜனைக்கீர்த்தனை நூலொன்றும் கற்றோரும் மிக்காருங்கண்டு அகமகிழத்தக்க விதத்தில் இயற்றி அச்சேற்றிப் பிரசுரப்படுத்தியிருந்தார்கள். அவற்றில் சிவபிரான் யமகவந்தாதி நூல்கள் பக்தர்களின் கரங்களிலிருந்து வருகின்றன. சிவபஜனைக்கீர்த்தனை நூல்கள் பல நாளாகத் தேடியும் அகப்படுவது அரிதாக இருந்துவருவதை உத்தேசித்தும் மேற்கூறிய வித்வான் அவர்களால் இயற்றப்பெற்று அச்சேறாதிருந்துவிட்ட சில கீர்த்தனைகளை ஒன்றுசேர்த்துப் பிரசுரிக்க வேண்டுமென்ற அவா பலருக்கிருந்ததைக் கண்டும் எனது ஆப்தநண்பரும் ஐக்கதேவி கருணை விலாச வித்யாசாலை ஸ்தாபகரும் ஆசிரியர் மானேஜருமான வாகனி

R. திருமலை ஐக்கையாகவுண்டர் அவர்கள் மிக்க சிரமமெடுத்து அச் சேருதிருந்த கீர்த்தனைகளைச் சேகரித்து சிவபஜனைக் கீர்த்தனைகள் என்றிருந்த நூற்பெயரை "பக்திரச பஜனாமிர்தம்" என்ற புதுப் பெயர் புனைந்து, பிரசுரிக்க முன்வந்தமை போற்றத்தக்கதே.

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்பை யில."

என்று கூறிய திருவள்ளுவ நாயனாரின் உண்மைக் கருத்திற்கிணங்கி உலகினர் சுகமெய்துவதற்குப் பக்திரச பஜனாமிர்தக் கீர்த்தனைகள் பேருதவியாகும் என்பது எனது முழுநம்பிக்கை.

ஈண்டு விவரிக்கப்பெற்ற இக்கீர்த்தனைகள் இளையாரும் முதியாரும் எளிதாகப் பாடத்தக்க விதங்களில் இயற்றப்பெற்றிருக்கின்றனவென்பதற்கும் இலக்கண இலக்கிய வழுவின்றிப் பாடப் பெற்றிருக்கின்றனவென்பதற்கும் மகாவித்வான்களாற் கொடுக்கப் பெற்றிருக்கும் சாற்றுக்கவிகளே சான்றாகும்.

உலகத்திடையிருக்கும் மக்கள் சமஸ்தரும் எப்பொருட்கும் ஒப்பற்ற இறைவனைப் பாமாலைகளாற் பூஜித்து மோக்ஷ சாம்ராஜ்யத்தைத் தனதாக்கிக்கொள்ள இக்கீர்த்தனைகள் மிகவும் பிரயோஜனகாமாகுமென்று நம்புகிறேன்.

இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்ற மற்றைய நூல்களையும் அச்சிட்டு வெளிப்படுத்துமாறு நண்பர் திருமலைஐக்கையா அவர்கட்கு நிறைந்த கல்வியும் தேர்ந்தமதியும் நோயற்ற வாழ்வும் எய்துவண்ணம் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் பாலிப்பாராக.

கோம்பை
15—2—24

உ. ம. சே. முகியித்தீன்பிள்ளை ராவுத்தர்
காந்திப்பாறை எஸ்டேட் சொந்தக்காரர்

# சிறப்புப் பாயிரம்.

இந்நிலவுலகின்கண் கவிதை, சங்கீதம், சித்திரம் ஆகிய இவை களே எல்லாருடைய மனத்தையும் நன்கு கவர்ந்து பேரானந்தம் ஊட்டுவனவாய் விளங்கிவருகின்றன. இவற்றுள் கவிதையே சிரேஷ்ட மானது. கவிதாசக்தியே ஊக்கத்தையும் உற்சாகத்தையும் எழுப்பி லோகாநுஷ்டானங்களுக்குக் காரணபூதமாய் உலகினர்க்கு மிகமிகப் பிரயோஜனகரமாய் இருந்து வருகின்றது.

புவனத்திலுள்ள பற்பல பிரதேசபாஷா மகாவித்வசிரோமணி கள் அவதார மூர்த்திகளாய்த் தோன்றி லோகோபகாரமான கவிதா (காவ்ய) நூல்களை இயற்றிப் பேருதவிபுரிந்து வந்திருக்கின்றார்கள், வருகின்றார்கள், மண்ணும் விண்ணும் உள்ளளவும் மன்னிய நற்கீர் த்திமாலை புனைந்து நீடு வாழ்கின்றார்கள்.

தெய்வ சிருஷ்டியின் மகிமையை யாவரே விவரிக்க வல்லார்? ஒவ்வொரு மனிதனுடைய முகமும் குரலும் வெவ்வேறு விதமாகப் படைத்தருளியிருப்பது ஆச்சரியத்திலும் ஆச்சரியமென்றால் ஏனைய வைகளை விரித்துரைக்க இயலுமோ.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்" என்றார் நாயனார்.

சர்வலோக சரண்யனாகிய ஜெகதீசனைப் புகழ்ந்தேத்தித் துதித் தலே நம்மைக் கரையேற்றி உய்விக்கச் செய்யும் சிறந்தமார்க்க மாகும்,

முற்காலத்தில் சமஸ்கிருத மகாகவி காளிதாசன், பவபூதி, மகாராஷ்டிர துக்காராம், தெலுங்குவேமன்னகவி, மலையாளம் துள்ளல் குஞ்சன் நம்பியார், நமது தமிழ்க்கவிஞர் கோமணிகளான கம்பர், புகழேந்தி, ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலான வித்வான்களும், தற்காலத்தில் ஜெகப்பிரசித்திபெற்ற ரவீந்திரநாததாகூர் (வங்காள மகாகவி) சாமர்த்தியம் பொருந்திவிளங்கிய காலஞ்சென்ற சி. சுப்பிர

மணிய பாரதியார் முதலான கவிதாரத்னங்களும் தங்களின் அருமையான அநுபவ உணர்ச்சிகளையும் கற்பனாநயங்களையும் கவிகளின் மூலமாக வெளியிட்டுப் பிரசித்தி அடைந்திருக்கின்றார்கள்.

பரதகண்டம் எனும் நம் தாய் நாடாகிய இந்திய நன்னாட்டில் பற்பல பாஷைகள் பேசப்பட்டு வருகின்றன. இந்திய சகோதரர்கள் ஆங்காங்கு அவரவர்களது தாய்ப்பாஷை விருத்தியை நாடி பாஷாபிவிருத்தி செய்து முன்னேற்றம் அடைந்துவருகின்றார்கள்.

ஆனால் நமது தமிழ்நாட்டிலுள்ள தமிழர்கள் தாய்ப்பாஷையைப் பலதுறைகளிலும் அலட்சியம் செய்துவருகின்றார்கள். அமிழ்தினும் இனிய தமிழ்மொழியின் சிறப்பு எத்தகையது?

“சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே அதைத்
தொழுது படித்திடடி பாப்பா” என்றார் பாரதி.

தமிழ்த்தாயின் அருமைப்புதல்வர்களே! புதல்விகளே!! தமிழே * தமிழ் என்று கொள்ளுங்கள். தமிழபிவிருத்தியையே பெரிதும் நாடுங்கள்.

சாரங்நாத் எம்பெருமானைப் பண்ணொடு இசைத்துப் பஜனை செய்து துதித்தேத்துவது பக்தர்களது வழக்கமாயும் அநுகூலசாதகமாயும் இருக்கின்றது. சங்கீதத்திற்கு உருகாத ஓர் பிராணி உலகில் உளதோ! பகவானும் பண்ணைவிரும்பும் பரமதயாநிதி அன்றோ! பஜனம் பஜிப்பது பூஜிப்பது என்ற அர்த்தம் உடையதாகும். பஜனைக்கோர் ஒப்பற்ற வழிகாட்டியான பக்திரச பஜனாமிர்தம் என்ற இந்நூல் முன்பு 1903வருஷத்தில் கோம்பை ஜனாப் உ. ம. சே. முகியித்தீன் பிள்ளை ராவுத்தர் அவர்களது முயற்சியால் முதற்பதிப்பாக வெளிவந்து உலவினது. நிற்க. இந்நூலாசிரியரின் ஜீவியசாராம்சம் இங்கு சிறிது கூறுகின்றேன்.

கன்னடப்பிரதேசமான மைசூர் ராஜ்யத்தில் சுமார் 300வருடங்கட்குமுன்னர் வந்து இத்தமிழ்நாட்டிற் குடியேறின ஜாதியார் எங்கள் காமுகுல ஒக்கலிகவகுப்பினர்கள். எமது சுயபாஷை கன்ன

* தமிழ்—இன்பம்.

டம். தமிழ் நாட்டில் குடியேறினவர்கள் ஆனதால் தற்போது கன்னடம் வீட்டுப்பாஷையாக இருக்கின்றது. மைசூர்ப்பிரஜைகளில் காலில் ஒருபங்கு 14 லட்சம் ஜனசங்கியை உள்ளோர் ஒக்கலிகர்களே ஆவர். தமிழ்நாட்டில் மதுரை, கோயம்புத்தூர், சேலம் முதலான ஜில்லாக்களில் லட்சக்கணக்கான ஜனத்தொகையுள்ள ஒக்கலிகர்களும் வாழ்ந்து வருகின்றார்கள்.

எமது சமூகம் கல்வியில் பின்னோக்குடையது. ஆனால் தற்போது கல்வி விஷயத்தில் சிறிது முன்னேறி வருகின்றது. ஒக்கலிகர்களுக்குள் காவிய வசனநூலாசிரியராய் பேர்பெற்று ஒப்பற்ற சூடாமணியாய்த்துலங்கியவர் நமது கோம்பை சித்திரகவி வித்வான் க. திருமலைஜக்கையகவுடர் அவர்களே என்பது உலகறிந்த விஷயம்.

மதுரை ஜில்லாவில் பேர் பெற்று விளங்கும் கோம்பையம்பதியில் கோம்பை ஜமீன்மரபில் ஸ்ரீமாந் கன்னப்பகவுடர் அவர்கட்கு ஏகபுத்திர சிகாமணியாய் உற்பவித்தார். சிறுவயதில் கற்றகல்வியோடு சுயமுயற்சியாலும் கவிபாடுதலில் வல்லவராய் விளங்கினர். இவ்வுலகவாழ்வைத் துறக்கும்போது இவரது வயது எழுபதாகும். காலஞ்சென்றதினம் (1-11-17) பிங்கள௵ ஐப்பசி௴ 16௳. இவர் காலஞ்செல்லுவதற்கு முன்பு சுமார் 3 வருஷகாலமாக இவரிடம் நெருங்கிப்பழகியிருக்கின்றேன். தொண்டுகிழவரானாலும் சதா புஸ்தகஆராய்ச்சியில் பெரிதும் விருப்புடையார். நல்ல மதியூகி. சோம்பல் என்ற குணமே அவரிடம் காணக்கிடையாது. மிகுந்த சுறுசுறுப்பும் முயற்சியும் உள்ளவர். ‘தெய்வங்காட்டும், ஊட்டுமோ’ என்ற பழமொழிப்படி முயற்சியினாலே இவர் முன்னுக்கு வந்தார் என்பது எனது திடமான அநுபவம்.

இவரிடம் (வியாசங்கம்) பழகிய அநேகர் தற்போது தேர்ந்த மதியும் உலகாநுபவமும் நிறைந்து விளங்குகின்றார்கள். கோம்பை நகரின் தற்போதைய முற்போக்குக்கு மூலகாரணர் இவர்களேஆவர். இவரியற்றிய செய்யுள் நூல்களாவன:—காமாக்ஷி அம்மை பதிகம், மாவூற்று வேலப்பர் பதிகம், சிதம்பர சபாநாதர் பதிகம், மல்லிங்க நாதர் சிலேடைப்பதிகம், சித்தி விநாயகர் பதிகம், சிவ பஜனைக் கீர்த்

தனைகள், என்ற பக்திரசபஜனாமிர்தம், சிவபிரான்யமகவந்தாதி, மாலை மாற்று சித்திரகவிகள் முதலான நூல்கள். அவரது காலத்தில் அச்சிடப் பெற்றிருக்கின்றன.

அரிச்சந்திர வெண்பா, ஒருதுறைக்கோவை முதலிய காவிய நூல்களும், அற்புதகற்பனாரசம் நிறைந்த கர்வகான குடாரி என்ற நாவலும் இன்னும் அச்சாகாமலே இருந்து வருகின்றன. சுமார் 30வருஷ காலந்தொட்டே அநேக தமிழ்ப்பத்திரிகைகளுக்கு அரிய விஷயதானம் செய்து வந்திருக்கின்றார்.

கிரந்தம், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலான பாஷைகளிலும் நல்ல விற்பத்தியுண்டு, 'பாடையேறினும் ஏடதுகைவிடேல்' என்ற பழமொழி இவர் விஷயத்தில் ஏற்ற பொருத்தமானதாகும். முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் அன்றோ?

பஜனாமிர்தம் பழைய வர்னமெட்டுகளாய்த் தோன்றின போதிலும் அருமையும் உருக்கமுமான வாசகங்களால் புனையப்பெற்றிருப்பது புகழத்தக்கதாகும். சங்கீதவழியில் தியாகராஜ ஐயரவர்களது கீர்த்தனைகளைத் தற்போது எவ்வளவு அருமையாய்ப்போற்றிவருகின்றார்களோ அவ்வாறே பக்திரசம் ததும்பும் கனிகரமான மெட்டுகள் வாய்ந்த பஜனாமிர்தமும் இத்தகைய நூல்வழிகொண்டதாகு மென்பது மிகையாகாது.

இந்நூல்தான், பார்ஸி முதலான ஆடம்பர வர்ணமெட்டுகளால் சங்கீத உலகத்திற்கே சோர்வுண்டாகி பழிக்கக்கூடிய பாடல்களை வேடிக்கை தமாஷ் பாணிகளில் பாட்டுக்களை அமைத்து அவைகளைப் படித்து சங்கீதத்திற்குக் கேடுசூழ்ந்தவர்களாய் விட்டார்கள் இக்காலத்தில். ஆடம்பரப்பகட்டு மெட்டுக்கள் பஜனைக்கு அவ்வளவு உசிதமானவாகாவல்லவா? பஜனைக்கோஷ்டியார்களுக்கும் சங்கீத அபிருசி கொண்டவர்களுக்கும் இந்நூல் மிகுந்த பயனளிக்கும் என்பது எனது நம்பிக்கை.

இதைப் புதிய பதிப்பாக வெளியாக்கவேண்டும் என்றஎண்ணம். எனக்கு நெடுநாளாக உண்டு. எனது கோரிக்கையைச் சமீபகாலத்தில் கோம்பை ஜமீந்தார் அவர்கள் குமாரர் மாட்சிமையாய்ந்த விஜயகல்

ஸ்ரீரங்க குமார தளவாய் அப்பாஜி துரைச்சாமி துரை அவர்களிடமும் இந்நூலாசிரியாது ஆதிசிஷ்யர்களும் இவ்வூர்ப்பிரபலஸ்தர்களுமான தி. ர. திருமலே சுப்பு செட்டியார் அவர்களிடமும் ஜனுப் உ. ம. சே. முகீயித்தீன் பிள்ளை ராவுத்தர் அவர்களிடமும் தெரிவித்ததில், அவர்கள் எனது முயற்சிக்கு ஆதரவு காட்டினர்கள். ஊக்கப்படுத்தினர்கள். இவர்கள் மூவர்களுக்கும் என் அன்பார்ந்த வந்தனம் கூறுகின்றேன். அத்துடன் இந்நூல் அச்சாகி வெளிவரப் பொருளுதவி புரிந்த கனவான்கள் அனைவர்களுக்கும் எனது பணிவான வந்தனம் செலுத்துகின்றேன். இந்நூலே வெளியாக்குவதற்கு என்னுடன் சிரமம் எடுத்துக்கொண்ட நண்பரும் உபாத்தியாயருமான இவ்வூர் S. காமாக்ஷி பிள்ளை அவர்களுக்கும் எனது மனமார்ந்தவந்தனம் புரிகின்றேன்.

சர்வ வல்லமையுள்ள இறைவன் நம்மெல்லோரையும் ஆசீர்வதிப்பாராக.

பொங்கும் மங்களம் எங்குந் தங்குக.

ஜக்கதேவிகருணு விலாச வித்யாசாலே, கோம்பை. 15—2—24.

அன்புள்ள,

R. திருமலே ஜக்கையா.



மதுரை மணிநகரம் ஹைக்கோர்ட்டுவக்கீல்,

## ஸ்ரீயுத ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் M. A. B. L.

# அபிப்பிராயம்.

---

இந்நூலாசிரியரின் உறவினரும் தமிழ்நலம் விரும்புபவருமான என் சிநேகிதர் கோம்பை R. திருமலைஐக்கையா அவர்கள் இந்நூலைப்பற்றி ஒரு அபிப்பிராயம் தரும்படி என்னைக் கேட்பதை மறுக்கொணாமையா லெழுதலானேன்; மற்றப்படி இந்நூல்போன்ற கீர்த்தன இசைத்தமிழியல்பறிந்து கூறுந்தகுதி யுடையேனல்லன். என் நண்பர் கீர்த்தனங்களை எனக்குப் பாடிக்காட்டக் கேட்டுவகை யுற்றேன். கீர்த்தனங்கள் பெரும்பாலு மிசையொடுபாட மிகவினிய சுவைநிறைந்துள்ளன. பக்திச்சுவையே பொருளாகக்கொண்ட இப் பாவினங்கள் தெய்வபக்தி நலமுடையனவெனக் கூறுவது மிகையாகும். இசைநயமும் பக்திச்சுவையுமே கண்ணாகக்கொண்ட இந்நூலில் யாப்பிய லிலக்கணமரபு வழுவாது, தமிழ்நறு மணமும் இனிய எளிய நடைநலமுந் தாமே யமைந்திருப்பது ஆசிரியர், கன்னடராயிருந்தும் அவரின் அளவற்ற தமிழார்வத்தையும் புலமையையுமினிது விளக்குவதாகும். இந்நூலை வெளிப்படுத்தி தமிழருக் கின்பமும் தம் முன்னோரான ஆசிரியருக்குற்ற புகழும்தரும் என் நண்பர் நன்முயற்சி மிகவும் பாராட்டத் தக்கதன்றோ!

மணிநகரம்
மதுரை.
18—3—24 } ச. சோமசுந்தர பாரதி



ஜக்கதேவி சகாயம்.

1924-ம் வருஷத்தில் இந்நூல் இரண்டாம் பதிப்பாய்
அச்சிடுங்காலத்தில் கல்விமான்கள்
கொடுத்தருளிய

# சாற்றுக்கவிகள்

—†—

அனுமந்த நகரம் மதுரகவி பிர்ம்மஸ்ரீ
ஸ்ரீநிவாசையங்கார் அவர்கள் இயற்றியவை.

---

சீர்த்தநிறை யிசைதாளம் வருணமுறை யோசையின்பந்
தெளிவு தேனை
வார்த்ததெனு மதுரமொழி வருணமதி தெய்வமுதன்
மரபி னுய்ந்து
தீர்த்தர்தம செவிக்கேற்பத் திருமலைஜக் கையனெனுஞ்
செல்வன் சொற்ற
கீர்த்தனைக ளச்சியற்றிக் கீர்த்திநிலை யிட்டுமதி
கிளர்ந்தான் மன்றே. (1)

அத்தகையோன் கோம்பையெனும் அழகுதிரு நகருறையும்
அமுத வாக்கான்
சத்வசுகோ தயன்ராம சாமியருந் தவத்துதித்த
தயாள மிக்கோன்
புத்தமுறப் பொதுநலத்திற் புண்ணியஞ்செய் கண்ணியவான்
புரையொன் றில்லான்
சித்தமெழும் வாகவிநந் திருமலைஜக் கையாவென்
சிறப்புற் றோனே. (2)

---

பழநில்தலம் ஸ்ரீலஸ்ரீ மாம்பழக்கவிச்சிங்க நாவலரவர்கள்
பிரபந்தத்திரட்டின் பதிப்பாசிரியரும் மார்க்கயன்கோட்டை
பிர்ம்மஸ்ரீ பிச்சாண்டி ஆச்சார்ய சுவாமிகளின் குமாரருமான

மகாவித்வான்

## M. P. பழநிச்சாமி ஆச்சாரியர் அவர்கள்

இயற்றியது.

---

பதியுரிமை வாய்ந்தகுலப் பண்புரிமை நண்புரிமை பகர்பே ரின்ப
மதியுரிமைமாண்புரிமையெனைத்தனைத்துமொன்றாகமருவிப்பேணுங்
கதியுரிமைபூண்டசெழுங்கதிருமலைஜக்கையமால்கனிந்துபோற்றுந்
துதியுரிமை யுனதன்றோ திருமலைஜக் கையநந் துரைச்சிங் கேறே.

---

ஷை மகாவித்வான் ஸ்ரீலஸ்ரீ M. P. பழநிச்சாமி ஆச்சார்யர்
அவர்கள் மாணுக்கரும் மருகருமான வித்வான்

## ஸ்ரீமான் M. S. சுந்தரம் ஆச்சாரியாரவர்கள்

இயற்றிய சிறப்புக்கவிகள்.

---

தண்டேன் மொண்டு நனியுண்டுற் சாகங் கொண்டு தொனிவிண்டு
வண்டே மண்டு வண்டடைவை வளஞ்சேர் கோம்பை மாநகர்க்கண்
விண்டே பண்டு கண்டுதுதி விளம்பும் ஜக்க தேவிக்குத்
தொண்டே கொண்டு வாழ்கின்ற சுராபி மாபின் பிரபுவழி. (1)

வருமந் தாரநேர் புயனை மகிபன் கன்னப் பனதில்லத்
தருமந் தழைப்பக் குலந்தழைப்பத் தமிழுந் தழைப்ப வன்றேனுக்
கருமந் தமக வாய்மேவி யாயுங் கலைகள் கற்றருளே
தருமந் தவா சிவன்றனது தாளே வணங்கும் மெய்யன்பன். (2)

கற்றா லடங்கி யதன்படிசெய் கையிலும் புரிந்து வாலறிவன்
நற்றா டொழுது மகிழ்வுறலே நல்லா ரியல்பென் பதற்கிலக்காய்
மற்றார்க் குளுமில் பெரும்புலமை வாய்க்க வடங்கி வாயுரையில்
சற்றா கிலுங்காட் டாதீசன் தனக்கே யதனைச் சமர்ப்பிப்போன். (3)

இளம்பு மனந்த விதமாயிங் கிதஞ்சேர் சித்ர கவியுள்ளும்
உளம்பு ளுக்கு மிறைக்கவிக ளுளவந் தாதி யுளுமன்றி
இளம்பு லவர்செய் பதிகமெனு மெளிய நூல்க ளுளுமதனில்
விளம்புங் கவிக டொறுமொருவி சேடம் வைக்கும் விற்பன்னன். ()

பொருத்த முறுமே லாங்கவித்வப் புலமை மட்டும் இயற்கையலால்
ஒருத்த ருணர்த்தல் மிகையெனலுக் கொருசான்றாகித் தனதறிவால்
பெருத்த கலைக ளிலக்கணங்கள் பேசும் இலக்கி யங்களெலாம்
திருதத முறக்கற் றாச்சரியத் தெருள்பெற் றிருந்த திறலாளன். (5)

எவனத் திறத்தில் யமகந்திரி பிதைப்போ லியற்றி னானென்னப்
புவனத் தினர்கள் சொலத்தெய்வப் புலமை யோடு மிருந்ததலால்
எவனத் திருந்த வாற்றலினு மெய்து முதுமை யினிலதிக
கவனத் தறிவு மிகமுதிர்ந்து கவிகள் பொழிந்த கருத்தாளன். (6)

இரும்பார் வியக்கு மினதிறத்தோ டிலங்கிச்சில்லாண் டுகளின்முன்
திரும்பாப் பதவி தனையடைந்த திரும லைஜக் கயன்செய்த
பெரும்பா வினங்கள் கீர்த்தனங்கள் பின்னு முளதை யச்சியற்றித்
தரும்பாக் கியவா னாகவவ தரித்தா னொருவ னவனெவனேல். (7)

இருமாநிலமாம்பூமடந்தைக்கெழின்மாமுகமாங்கோம்பையெனும்
திருமா துலவு சமஸ்தான ஜெமீன்கஸ் தூரிக் குளப்பாஜிப்
பெருமான் திரும லைஜக்கய பிரபி னம்ஸ வம்ஸத்தில்
வருமெம் M. ராமசாமிப்பேர் வள்ள லளித்த சுகுமாரன். (8)

துங்கத் தமிழ்வா ணன்திருவுந் துதிக்கும் ஜக்க தேவியின்பேர்
தங்கத் தருவித் யாசாலைத் தலைவன் கோம்பைக் கிருஷிகர்கள்
சங்கத் தின்செள ரவகார்ய தரிசி மதுரைத் தமிழ்ச்சங்க
அங்கத் தினனற் சிவபஜனை அரிப ஜனைக்கோஷ் டிக[illegible]பன். (9)

இனந்த மானன் நலந்தேச மெய்த யாமிங் கெடுத்துரையா
அனந்த மான பொதுநன்மைக் காமுத் யோகங் களைப்பெற்றுச்
சனந்த மாசைக் குரியனிவன் தானென் றடைய வவரோடு
தினந்த மாஷாய்ச் சத்கால க்ஷேபஞ் செய்யுஞ் சீராளன். (10)

நல்வித் வான்கள் சகவாசன் நம்மேல் மிக்க விசுவாசன்
செல்வக் கோம்பை நகர்வாசன் செகமெங் கணும்நற் புகழ்வாசன்
சொல்வித் தகன்திண் புயபாரன் தூய குணங்க ளிலபாரன்
கல்வித் துறைதேர் திருமலைஜக் கையாப்பேர்க்கண் ணியவானே. ()

ஆன்ற தான புலமையினி லருங்கு ணங்கு றியின்மேலும்
சான்ற தாமா பிற்பெயரிற் சாக்ஷாத் தவனாய் வருமிவன்பொன்
போன்ற தாமென் றவன்கவியைப் போற்றி யச்சிட் டளித்தனனால்
ஈன்ற தாயேன் மகவருமை யினைநன் கறியாள்? வாழியரோ. (12)

---

உத்தமபாளையம் துரிதகவி ஜனாப்

## U. P. அப்பாவுஉபாத்தியாயர் அவர்கள்

## இயற்றியன.

---

பொன்னப்புள் ளாய பொழுதாலப் பாசனகன்
வன்னப்பூந் தாளின் வழிசாக்—கன்னப்பன்
சீர்த்தனயன் கோம்பைத் திருமலைஜக் கையன்றன்
கீர்த்தனந்தா ளிக்காலக் கிதை. (1)

## சாற்றுக்கவிகள்.

அம்மைஜக்க தேவியரின் கடாக்ஷமுமீ ணம்பிகையி
ணருளி னாலும்
செம்மையல தொருகா லுஞ் செய்தறியா நல்லாரின்
சேர்க்கை யாலும்
தம்மையடுத் தவர்க்கினிய நன்மொழியே சாற்றுமொரு
தன்மை யாலும்
இம்மையினற் புகழ்பாப்புஞ் செந்தமிழில் வாகவியாய்
இயற்றும் நாவான். (2)

ஆர்R.திரும லைஜக்கை யாவென்பான் அச்சியற்றி
அதனா லாய
பேர்புனைந்தான் புகழ்சிறந்தான் மகிதலத்தார் பாடியவப்
பெருமை யோர்ந்து
வார்சடிலச் சங்கரனுந் தினகர வாக்கியத்தால்
மகிழ்வுற் றுன்மிக்
கார்தகைமை யின்றமிழாற் பெரிதுறுமென் றிம்பர்தனிற்
காட்டிற் றம்மா. (3)



ஐக்கதேவி சகாயம்.

1903-ம் வருஷத்தில் இந்நூல் முதற்பதிப்பாய் அச்சிடுங்காலத்தில்
கல்விமான்கள் கொடுத்தருளிய

# சாற்றுக்கவிகள்.

—*—

கொட்டகுடி ஜமீன் மானேஜரும் சைவசித்தாந்த
நிஷ்டாநுபூதி வாய்ந்தவருமாகிய
ஸ்ரீமான் கு. அண்ணாமலைப் பிள்ளையவர்கள்
இயற்றியது

---

பரவைபுடைசூழவனி மிசைநளினைவளருமொரு
பதியாதெனத்துருவியே
பார்த்தினியமறையோர்கள் வேள்விபுரிமனைகளும்
பான்மொழிநிலாமுகத்தர்

குரவைபயில்வீதிகளு மேலமொடுபணமணங்
குலவுமாடங்களுஞ்சேர்
கோம்பைநகரேயெனத் தேர்ந்தமாலவ்விடங்
குறுகுவேமாகிலந்த

வானினதுபணவல்கு லாயிழையைமருவலா
மதுநமக்குரியவூரே
யாகவெனவந்தினிது வாழுமந்நகரதனி
லதிகநலனுறவாழுவோன்

காவிலாநெஞ்சினன் றிருமலைசக்கயக்
கவிவாணனானதன்பன்
கழறுசிவகீர்த்தனம துலகுய்யுநூலெனக்
கற்றோருரைப்பர்மாதோ.

---

ஏரசக்கராயகனூர் ஜமீன் மல்லிங்கபுரம் காலஞ்சென்ற
ஸ்ரீமான். பொன்னம்பலக் கவிராயரவர்க ளியற்றியது.

---

முத்தமிழிலெத்தமிழுந்தேர்ந்துசொலுந்தமிழ்ப்புலவீர்மொழியக்கே
உத்தமியம்பிகைகணவன்றனையனுளமகிழ்ந்துகதியுதவவேண்டிச்[ளீர்
சுத்தமிகுசிவபஜனைதிருமலைசக்கயக்கவிஞன்சொற்றானிந்தச்
சத்தமிருநிலத்தினையுந்திசையினையுமளந்துவிண்ணிற்றாவிற்றம்மா.

---

சிவகிரி சமஸ்தானம் மஹா வித்வான்
ஸ்ரீமான் ச. திருமலைவேற் கவிராயரவர்கள்
இயற்றியது.

---

விரும்புருவம்பெறுமதனன்கோம்பைவளம்பதிவாசன்வேந்தர்போற்ற
வரும்புருடதில்கமெனுந்திருமலைசக்கயதமிழ்ப்பாவல்லோன்சொன்ன
கரும்புருசிநிகர்மதுரக்கீர்த்தனமாந்தமிழ்க்குமகாகடினமார்வல்
விரும்புருகுங்கல்லுருகுமெவர்மனந்தானிதற்குருகாதெண்ணுங்காலே

---

மார்க்கயன்கோட்டை வித்வான்
ஸ்ரீமான் M. P. பழநிச்சாமி யாசாரியாரவர்கள்
இயற்றியது.

---

அந்தணந்தானம்புகழோடரியகதியருள்வதெழிலானூர்பாத [ல்
வந்தனந்தரனெனத்தெளிந்துமகிழ்கீதத்துதித்தொகுதிவழுத்தினனை
நந்தனந்தாமரைத்தடஞ்சூழ்நலந்திகழ்தென்கோம்பையெனுநகரில்வாழ்வு
கந்தனந்தாமணிகவிஞர்கண்மணியாந்திருமலைசக்கயவல்லோனே.

---

புதுப்பட்டி அஷ்டாவதானியவர்கள் குமாரர் காலஞ்சென்ற
ஸ்ரீமான் செல்லமுத்து சேர்வையவர்க ளியற்றியது.

---

வருமலையாலடியர்குழாம்வநந்தாமலருள்புரியும்வரதன்வாசக்
தருமலைசேர்குழற்கவுரிதழுவுசிவன்மீதுகீர்த்தனங்கள்சந்தப்
பெருமலையக்கும்பமுனிக்கிணையெனப்பற்பலகலையும்பெரிதுணர்ந்த
திருமலைசக்கயதமிழ்ப்பாவலன்பகர்ந்தான்புகழ்ந்திதனைச்செப்பார்யா
[ரே

---

பழநிஸ்தலம் எஸ். எஸ். எஸ். வி. கம்பெனி ஸ்டேஜ் மானேஜர்
மகா-ா-ா-ஸ்ரீ வே. முத்தனுசாரியாரவர்கள்
இயற்றியது.

---

சகலபுவனாத்மாசஷ்கராந்தனை நிலா
சம்புமீதன்புகூர்ந்து
தண்டமிழினன்மதுராசகீர்த்தனங்கள்பல
சாற்றிசற்கீர்த்திபெற்றான்
பகாரியவாகமபுராணேதிகாசவிற்
பணிசிரேஷ்டப்ரதாபன்
பத்தியுடனேபஜனைநித்தியஞ்செய்தான்
பதமலர்துதிக்குநேமன்
திகழ்கிரணசந்திராதித்தர்முறைபிசகினுஞ்
செப்புமொழிதப்பாதவன்
செந்தமிழ்ப்பாவலர்மதித்திடப்பலகலை
தினம்பயிலுநன்றவினன்
மகிமைபெறுகோம்பையம்பதியில்வாழ்கன்னப்ப
வள்ளல்மாதவகுமாரன்
மதியூகமெகம்பீரதிருமலைச்சக்கய
மகாவித்வதிடாத்னமே.

---

கோம்பை ஸ்ரீமான் துரைப்பாண்டியாரவர்கள் குமாரரும்
கோம்பை யூனியன் போர்டு பிரசிடெண்டுமான
ஸ்ரீமான் சின்னச்சாமி குள்ளப்பகவுடர்
அவர்கள் இயற்றியது.

---

அருமறையினுட்பொருளாம்சிவபிரானருட்கடல்சீரதனைமொண்டு[லே
திருமலைசக்கயனெனுங்கார்பொழிசிவகீர்த்தனமழையின்செழுமையா
வருமகிலத்தஞ்ஞானமெனுங்கோடைநீங்கியிமமைமறுமையின்பம்
தருமரியசிவபத்தியெனும்பயிர்களுலகெங்குந்தழைக்குமன்றே.

---

அம்மாபட்டி ஸ்ரீமான் S. S. சுருளியாண்டிக் கவுடர் அவர்க ளியற்றியது.

---

[தோல்
பார்த்தனங்கமிசைமோதப்பாசுபதம்பரிந்தளித்துப்பனைக்கைமாத்
போர்த்தனங்கனுகமதன்றனைத்தீய்த்தன்பருக்கருளேபுரிந்துகாக்கும்
தீர்த்தனங்கமணியான்மேற்றிருமலைசக்கயனன்பாற்செப்பிடுஞ்சங்
கீர்த்தனங்கட்குருகியன்றேவல்விரும்புக்கயமெனும்பேர்கிடைத்ததா
[மே.

---

கோம்பை போர்டு பெண்பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் ஸ்ரீமான் V. பரமசிவன் சேர்வை அவர்கள் இயற்றியது.

---

கடிபொழில்சூழ்கோம்பைநகர்கன்னப்பன்றவத்துதித்தகல்விமிக்கோ
படிபுகழுந்திருமலைசக்கயகமகனுள்ளன்பாற்பத்தியுற்றே [ன்
யடிமுடியுகடுவுமிலாப்பான்மேற்சொல்கீர்த்தனமாமமுதையுண்டோர்
மிடிமைதுயர்பவமகற்றியெக்காளும்பேரின்பமேவுவாரே.

---

கோம்பை கனதனவர்த்தகரும் கோம்பை பஞ்சாயத்துக் கோர்ட் பிரசிடெண்டுமான ஸ்ரீமான் T. R. திருமலைசுப்பு செட்டியாரவர்கள் இயற்றியது.

---

பார்த்திபர்போற்றுங்கோம்பைநகர்வாழ்கன்னப்பவிற்பன்னனீன்ற
சீர்த்திமிகுதிருமலைசக்கயக்கவிஞன்றனிமுதலாம்சிவத்தின்மீதும்
கார்த்திகேயன்மீதும்பகர்சங்கீதங்கள்பவக்கடல்கடத்தும்
பூர்த்தியாம்வங்கமதாம்அகவிருட்கோர்தீபமென்றும்புகலலாமே.

---

### சென்னை மேரிராணி காலேஜ் தலைமைத்தமிழ்ப் பண்டிதரும் நல்லாசிரியன் பத்திராதிபருமான கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் இயற்றியது.

---

பார்த்தனையன்றெதிரிட்டுவலிந்தாண்டுபாசுபதம்பரிவினீந்த
தீர்த்தனைநெஞ்சுவப்புறக்குமினியநெறியிசையென்னத்தெளிவினோர்க்கு
கீர்த்தனைதந்தான்கோம்பைத்திருமலைசக்கயக்கவிஞன்கேடிலன்பு
வார்த்தனையபத்தியுடன்நவாசமும்வளம்பலவுமன்னமாதோ.

---

### இந்நூலைப் பரிசோதித்தருளிய ஸ்ரீமான் ச. திருமலைவேற் கவிராயரவர்கள்மீது இந்நூலாசிரியரியற்றியது.

---

ஆர்த்தனமாதிரைகுலவமலிதடஞ்சூ
 முணிதிகழ்மல்லிங்கநகர்தனில்வாழ்நேமன்
வார்த்தனமாதிரமருப்பின்வயங்குவாணி
 வண்சுரும்பரிசைபயில்செங்கமலமேவுஞ்
சீர்த்தனமாதிருவரைத்திண்புயநாவேற்ற
 திருமலைவேற்கவிவலவன்சிவன்மீதியான்சொல்
கீர்த்தனமாதிகளைக்கண்பார்த்துநல்கிக்
 கிரீசனருளோடுபடைத்தான்கீர்த்திமாதோ.

சாற்றுக்கவிகள்.

சம்பூரணம்.





உ

ஜக்கதேவி சகாயம்.

சித்திரகவி வித்வான்

க. திருமலே ஜக்கையகவுடர் அவர்கள்

இயற்றிய

# பக்திரச பஜனாமிர்தம்.



## கணேசர் துதி.

1. இராகம் நாட்டை—ஆதிதாளம்.

பல்லவி.

ஆகுவாகனா கஜானனா (ஆகு)

அநுபல்லவி.

கோகனகசரண ஆகமவிதாரண கோதறுசிவசுதனே. (ஆகு)

சரணங்கள்.

விமலபாலனே சுசீலனே
கமலதடநயன விமலவடசயன
கவினமாமிமருகா (ஆகு)

இந்த்ரபூஜிதா சுபாஷிதா
சந்த்ரஜடாதரா மந்த்ரகடோதரா
தவளாம்பரதரனே (ஆகு)

பகர்நன்னிதனே அதீதனே
ககனமுடனுலகு புகழுமயிலிலகு
கடவுள்சகோதரனே (ஆகு)

சுருதியாதியே அநாதியே
மருவுசதுர்ப்புயனே திருமலேஜக்கயன்சொல்
வரதா கதிநீயே. (ஆகு)



2. இராகம் கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

ஞானகஜமுகா நாளும்உன்பாதம்
நம்பினேனென்னை ரட்சித்தருள்வாய் (ஞா)

அநுபல்லவி.

தீன்தயாளா தேவகுஞ்சரிபா
சின்மயரூபா தேஜோமயனே (ஞா)

அம்பிகைபாலா அமலகுணகா
ஆதிகணேசா அங்குசபாசா (ஞா)

சர்வாதீதா சமாசநீதா
சாஸ்வதமோன தவளாம்பரனே (ஞா)

சந்ததம்திருமலை ஐக்கயன்முடிமேல்
தாளிணைசூட்டுந் தனிமுதற்பொருளே. (ஞா)

---

சத்குரு வணக்கம்.

---

3. இராகம் கீர்வாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சிவகுருவந்தனமே செய் சிவகுருவந்தனமே ஆ (சிவ)

அநுபல்லவி.

சிவகுருவந்தன மே நலமனமே
தவமிதுவே தினமே ஆ (சிவ)

அருவினைநீக்கும் இருவினையாக்கும்
அருள்விழிநோக்கும் ஸதா ஆ (சிவ)

நெறியிதல்லாது பெறுவகையாது
நீமறவாது ஸதா ஆ (சிவ)

திருமலைஐக்கயன் சென்னியின்மீது
சேவடிமலர் சூடும் ஆ (சிவ)

---

## சரஸ்வதி துதி.

---

4. இராகம் கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

வாணியேயென்னாவில் வந்தருள்வாய் (வாணி)

அநுபல்லவி.

காணியதாய்மிகக் கருணைபுரிந்தேயென்றும் (வாணி)

சரணங்கள்.

மலரயன்செழுநாவில் வாழுமற்புததேவி
நிலவுமறிஞர்க்காவி நீயுகந்தெனைமேவி (வாணி)

அருமைமிகும்நீதாயே அடிமைநானுன்சேயே
பெருமையுதவிநீயே பேணியெனையாள்வாயே (வாணி)

தாட்டுணைதிருமலை ஜக்கயன்[illegible]லை தன்தலை
சூட்டுங்கலாநிலை சுதந்தரியேகலை (வாணி)

---

(ராமமகி ப்ரணதபால என்ற மெட்டு.)

5. இராகம் கலியாணி-தாளம் ரூபகம்.

பல்லவி.

தாரகமா ப்ரணவரூப தாரகமா சமய விருத சகள வடிவ (தாரக)

அநுபல்லவி.

சர்வபூத சர்வபூரண சர்வாதீத தளபதும
சரண யுகள பரம குரவ (தாரக)

நந்திதேவ நந்திவாகன நந்தீச கணசமூக
நாத கீத வேத போத (தாரக)

திரிநேத்ர திரிபுராந்தக திருமலைஜக்கய வந்தித
சிமய திலக விமய நிலைய (தாரக)

---

(காக்கவே வருவாயே கருடனேறி என்ற மெட்டு.)

6. இராகம் தன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

சங்கரமகதேவா அரோஹர
சங்கரமகதேவா.

அநுபல்லவி.

துங்கரவிநயன சுந்தரவிபுத
பங்கஹிதசரதா அரோஹர (சங்கர)

பாலவிலோசன பதிதயாள
நீலகிரீவபதே அரோஹர (சங்கர)

அங்கஜமர்த்தன அனந்தகல்யாண
பங்கஜபதயுகளா அரோஹர (சங்கர)

சந்ததம்திருமலை ஜக்கயன்பணிநாதா
வந்தெனையாண்டருள்வாய் அரோஹர (சங்கர)

---

7. இராகம் பீல்-ஆதிதாளம்.

பல்லவி.

பாமநித்தியானந்தத் தாண்டவராயா
பாலவிலோசன மாம்பாஹி

அநுபல்லவி.

சுரகணவிநுத சர்வாதீத
சோமஜடாதர மாம்பாஹி
சோகநிவாரண கோமளாங்க
சோணகிரீசா மாம்பாஹி (பாம)

சீதபாக அம்புஜசரண
தீனதயாளோ மாம்பாஹி
சித்தஜநிக்ரக சுஜனபாலன
சின்மயகுரவே மாம்பாஹி (பாம)

பர்வதராஜ புத்ரிமனோகா
பன்னகபூஷண மாம்பாஹி
பாஹிதிருமலை ஜக்கயவந்தித
பஞ்சாக்ஷரவோ மாம்பாஹி (பாம)

(செவி நேனெட்லசகிம்துனே என்ற ஜாவளி மெட்டு.)

8. இராகம்நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

உனை நானென்றும் நம்பினேனே ஜக
நாதா கருணாகரா உனை நான்

அநுபல்லவி.

மானார்மலர்க்கையனே எங்கும் தானாகியமெய்யனே—உயர்
வானோர்பணிதுய்யனே உனை (நான்)
சோணாசலவாசனே தில்லை வாணா உமைநேசனே—மறை
காணாமருநீசனே உனை (நான்)
உலகிற்பிரகாசிக்கும் பல கலைகற்றோரைநேசிக்கும்—திரு
மலைஜக்கயன்பூசிக்கும் உனை (நான்)

(தேன்துளிக்கும் வண்டுகிண்டும் என்றமெட்டு.)

9. இராகம் செங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

ஈசனேயடியவ ரிதயமதில்நிதமிலகும்
வாசனேயென்னெதிர்வந்துசுகந்தந்தருள்வாய்.

அநுபல்லவி.

பாசம்நீத்தமெய்த் தாசருக்கருள்
பாலித்திடுசிவனே திரிசூலப்படையவனே ஜக (ஈசனே)

சரணங்கள்.

மூர்த்திமூவரினுமுன்னவனேநன்னயமிகு
சீர்த்திசேர்சந்திர சேகரகிரு பாகரனே
பூர்த்தியாய்முகம் பார்த்திடாய்பணி
பூண்டவனே தாண்டவனே காண்டிபனை யாண்ட ஜக (ஈசனே)

நிந்தையாகியபல நெறியதனால் வெறிகொளுமென்
சிந்தையாகுலமது தீர்ந்திடமகிழ் கூர்ந்திடுவாய்
தந்தைதாய்குருவிந்தைசேர்தெய்வம்
சகலமுநீயல்லாதொரு புகலுளதோசொல்லாய் ஜக (நீசனே)

காலகாலஜகத் காரணபரிபூரணனே
பாலலோசனபொற் பாதாசபை நாதாநிகழ்
நீலகண்டக பாலருத்திர
நிலைபெற்றிடநாளும் திருமலைஜக்கய னோதும் ஜக (நீசனே)

---

(மாதரை நினையாதே என்றமெட்டு.)

**10.** இராகம் கமால்-ஆதிதாளம்.

பல்லவி.

நாதனைமறவாதே வேத நாதனை மறவாதே.

அநுபல்லவி.

ஆதரைமிசைபா மாதரைத் தினமே
அன்புடன்விரும்பியே யலைந்திடு மனமே (நாதனை)

சரணங்கள்.

காதகருறவாற் கயல்விழி வேசி
காந்தனுய்த் திரிந்து நீ கடியபொய் பேசி
பாதகனுகாமற் பழி வழி கூசி
பவங்களையறவோட்டிப் பதிதரும் காசி (நாதனை)

என்றும் சைவசமய மார்க்கத்தை நாடு
இசையுடனேசிவ பஜனையைப் பாடு
சென்று சிவனடியா ருடனுற வாடு
சிவசிவவெனுமந்திரம் செப்பியன் போடு (நாதனை)

அருமறைமுடிவினு மவனல தில்லை
அண்டர்கோனிவன்கீர்த்திக் குண்டோவோ ரெல்லை
திருமலைஜக்கயன்சொல்திகம்பரன் றொல்லைத்
தீவினையடங்கலும் தீர்த்தருள் தில்லை (நாதனை)



(சிவசிதம்பரத் தாண்டவராயா என்றமெட்டு.)

11. இராகம் சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

கனகசபையிலாடியதேவா கதி-யளித்திடும்தில்லைக்
கனகசபையிலாடியதேவா—ஒற்றைக்
காலைத்தூக்கிப்பரிபுரம் கலகலவென்றோலமிடக்
கனகசபையிலாடியதேவா உக்ர காளிநாண பாதர்கள்
காதல்பூண அடியவர் கண்டுமிஞ்சியவுவகை
கொண்டுநெஞ்சகமுருக கனகசபையிலாடியதேவா.

அநுபல்லவி.

பனகபூஷணம்கையிற்றரித்து பலமலர்த்தொடையுரத்திற்பரித்து
பனிமதிச்சடை திகழவிரித்து பரவசமாக
தரிகுகுதரிகுகுஜெம்தரி தில்லானதொம்தரிகிட
தகணகதகணகஜெம் தகணகதகணகஜெம்
ததிம்திமித ததிம்திமித ததிங்கணதத்தோமெனவே (கன)

சரணங்கள்.

கொலைமுதலாம்பாவமைந்தும் குடிகொள்நெஞ்சவஞ்சகருடன்
கூடியேபிழையியற்றிமமதை கொண்டுமே மருளாய்
வலையிலேபுகுமானெனநான் மயங்கிடாமலித்ததியிலென்முன்
வந்தடியேன்கதிபெறும்படி மலரடி யருளாய்
அலைகடலுலகினிலுன்றனை யல்லாலேதுங்கதியிலை
அகமிகமகிழ்பெறவும் இகபரசுகமுறவும்
அனந்தமொடு ஜகம்புகழ அனமுந்தன மூந்தந்தருள் (கனக)

மறுவறுமாதவமோன மலரஹிதமெஞ்ஞானபூரண
மகிமைபெறுநின்னடியாருடன் வாழவே கூடி
அறுபகையிலொன்றாகு மரிவையர்தம்மோகபாச
அந்தகாரந்தனிற்புகாமல்நின் னருளொளி காட்டி
குறுகியபிணிமிடியென்றன்மு னில்லாதோடவுமிருபுகழ்
குவலயமதிலிலக கவலைகளெதும் விலகக்
குறித்துவரமளித்தடிமை கொண்டெனையாள் வாயாஹர (கனக)

அருமறைதேர்நான்முகனு மம்புயலோசனமாலும்
அலைந்துதேடியுங்காணவொண்ணு அடி முடியோனே
மருவுசராசரமீன்ற மாதாவோர்பாகனே திரு
மலைஜக்கயன்றனி தயாசனம் வளர் நெடியோனே
பொருவருநெடுவடகுன்றெழில் வில்லாயோர் செங்கையிலுற
புரநனியெரிபடவும் சுரர்பயமதுவிடவும்
பரிந்துபலியிரந்தவனே புலியும்பணியும்பணிய (கனக)

---

12. இராகம் முகாரி-அடதாளம்.

பல்லவி.

வேண்டுவவெது நெஞ்சமே—யுனக்கு
வேண்டாதெது நெஞ்சமே

அநுபல்லவி-

ஆண்டுநமை ரக்ஷிக்கும் தில்லைநடராஜர்
அருட்பார்வையே வேண்டுமா அல்லால்
மாண்டுமடியுமட்டும் சஞ்சலம் தருமாதர்
மருட்பார்வையே வேண்டுமா நீ (வேண

நித்தமுமைபங்கர் பாதத்திலர்ச்சித்து
நிரப்பமலர்கள் வேண்டுமா அல்லால்
பத்தஞ்சற்றுமில்லாத வேசையர் படுக்கையில்
பரப்பமலர்கள் வேண்டுமா நீ (வேண்டுவ)

திருநாள்பூசை தவம் செய்யுமடியர்துன்பம்
சிதைக்கும்பாதமே வேண்டுமா கேட்ட
தொருநாள்கொடா விட்டாற் போடாவென்றேயெட்டி
உதைக்கும்பாதமே வேண்டுமா நீ (வேண்டுவ)

ஆதிபகவனடி தாழும் சற்ஜனர் வாழும்
அந்தவீடே வேண்டுமா அல்லால்
சூதினாற்காமுகர் குடிகெடுக்கும் வேசையர்
சொந்தவீடே வேண்டுமா நீ (வேண்டுவ)

அன்பன் திருமலைஜக் கயன் துதிசெய்திடும்
அச்சிற்றம்பலம் வேண்டுமா அல்லால்
இன்பம் போலவேகன துன்பம் செய்விலைமாதர்
எச்சிற்றம்பலம் வேண்டுமா நீ (வேண்டுவ)

---

(வையாபுரிமுருகையனே என்ற மெட்டு)

13. இராகம் தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

நித்தியானந்த பூரணனே நின்மலபதாம்புயனே

அநுபல்லவி.

அத்தியுரிபோர்த்த சத்திமணாளாநின்
பத்தியே தந்தருள்வாய் (நித்தி)

சரணங்கள்.

வில்வவன நாதனே விண்ணோர் பணிபாதனே
வல்வினைகள் நீங்க செல்வம் வளர்ந்தோங்க
நல்வரமே யருள்வாய் (நித்தி)

கன்னல் மொழிசேருமை காதலனே யடிமை
இன்னலறநீக்கி நன்னயமாயாள்வாய்
பன்னகபூஷணனே (நித்தி)

கல்லை நிகரென்னெஞ்சம் கரையவருள்நீ தஞ்சம்
தில்லைநடேசாவென் தொல்லைவினைதீர
இல்லையே யென்ன செய்வேன் (நித்தி)

சேவடி சென்னிபுனை திருமலைஜக்கயனை
பூவுலகின்மீது காவல் செய்தாள் ஸர்வ
ஜீவதயாபரனே (நித்தி)

---

14. இராகம் தன்யாசி-ஆதிதாளம்.
பல்லவி.

சம்புசிவ சந்த்ரசேகரா உயர்
தற்பரனே நற்கயிலை வெற்பிலுறையற்புதனே
தாணுவேகிருபாசாகரா

அநுபல்லவி.

அம்புஜமலர்ப்பாதனே நம்புமெளியார்கள்தமை
அனவரத மருள்செய் கனவரதனேயெழில் (சம்பு)

சரணங்கள்.

இன்னமென்மே லென்ன வன்மமோ உனை
இரவும்பகலு மன்பாய்ப் பாவி மிகவுருகும்
ஏழையேன் செய்பூர்வ கன்மமோ
பன்னகாபரணா செழுங் கன்னல்மொழியுமைபாகா
பக்ஷமுடனே யெனை நீ ரக்ஷியிதுவேசமயம் (சம்பு)

கன்மபரிபாகா உனையே தினம்
கருத்தினி லிருத்தினேன் வருத்தம தகற்றியே
காத்தருள் புரிவா யெனையே
சின்மயபஞ்சாக்ஷரனே நின்மலபரிபூரணா
சித்தரொடு முத்தர்பணி நித்தனே மகத்வமிகு (சம்பு)

அருமறைபணி தூய்யனே நாளும்
அண்டர் பரவும் பரனே தொண்டர்தமை யன்பினொடும்
அடுத்துவந்தாளு மெய்யனே
சருவபூதகாரணா திருமலைஜக்கயனை
சந்ததங்காத்தருள் சோம சுந்தரதயாபரனே (சம்பு)

---

(இதுசமயமையா வைவேல் முருகையா என்ற மெட்டு)

15. இராகம் கீர்வாணி—ஆதிதாளம்

பல்லவி.

விமலதாரணனே வேதபூரணனே

அநுபல்லவி.

நிமலகருணாகர நிகிலகாரணனே (விமல)

சரணங்கள்.

திருவளாரு ணேச சீதசசி சேகர
அருணகோடி பிரகாச அாஹாரபுர ஹர (விமல)

பனகபூஷணகர பரமபதாவ னக
கனகிமய தர கஜமுக சுஜ னக (விமல)

அருமறை தினமுவந் தறையுமாதிபகவ
திருமலைஜக்கயவர் திதுவ பத சிவ (விமல)

---

(ராமநாமஞ்செய் ஜென்மசாபல்யம் என்ற மெட்டு.)

16. இராகம் காபி-அட தாளம்.

பல்லவி.

பங்கஜமாமலர்ப் பதந்தரவாவா சிதம்பரதேவா

அநுபல்லவி.

சங்கரகிரிதா எங்கும்ப்ர காசா
சாட்குண்யகருணாவிலாசா கனகச பேசா (பங்கஜ)

நிரந்தர மடியரைப் புரந்தருள் நீதா
நித்யானந்த ஜகநாதா சிவஞான போதா (பங்கஜ)

உணர்வில்லாதவர் சற்று முணரா அருவே
உணருமறிஞர்க்குநல் லுருவே பரமசற்குருவே (பங்கஜ)

திருமலைஜக்கயனை மருவியாள் மெய்யா
தெய்வம் நீயென்பதென்னபொய்யா வரந்தருகையா (பங்கஜ)

---

(விடமுசாயாவே என்ற தியாகராஜகீர்த்தனை மெட்டு.)

17. இராகம் காகரப்பிரியா-ஆதி தாளம்.

பல்லவி.

மனமேயோடாதே ஜக மருளால்வாடாதே

அநுபல்லவி.

தினமேதாவில் மானுந் தழலும்
செங்கைகொளீசனை நினையா துழலும் (மன)

சரணங்கள்.

பொன்னிலமுடனே தாவுநற் சேலே
போல்கீள்விழியா ரரசையி னாலே

தன்னேரில்லா ஈசன் காலே
தஞ்சமென்னாத துருமெயில் போலே (மன)

தொண்டர்தம்மீது நல்லருள் பழுத்துச்
சொரியும்தேவ தருவென வழுத்து
மண்டர்கோமான் திருவைந் தெழுத்து
மறியாதுன்னுட னென்னையு மிழுத்து (மன)

சீராறிஞர் நேசம வாவும்
திருமலைஜக்கயன் சிந்தையில் மேவும்
காரார்கண்டன் செயலே யாவும்
கணமதிற்பதினா லுலகமும் தாவும் (மன)

---

(கொஞ்சவயதாச்சே எனைக்கூடலாகாதா என்ற மெட்டு.)

18. இராகம் வீரவசந்தா-ஆதிதாளம்.

பல்லவி.

சந்த்ரசேகா கங்காதர சம்போஹரனே

அநுபல்லவி.

பந்தமாமறைதேடும் பரனேமிகவாடும்
பாவியேனுனைநாடும்வகை பாராய் வரதா (சந்த்ர)

சரணங்கள்.

சின்மயரூபனே திவ்யப்ரதாபனே
தில்லைவாழ்நாடராயா செங்கண்மால்பணிதூயா
தினந்தொண்டர்சகாயா துயர் தீர்த்தாளையனே (சந்த்ர)

தற்பராதிருமலை ஜக்கயன்போற்றும்
சச்சிதாநந்தபோதா தமியேன்மிசைவாதா
ஜகமாயையின்தீதால்மனந் தாழவில்லையே (சந்த்ர)

---

19. இராகம் காம்போதி-தாளம்ஆதி.

பல்லவி.

இந்த வேளை நீவந்தெனையாள் சர்வேசா

அநுபல்லவி.

கந்த வேளைத்தந்த காரணயா னைந்த (இந்த)

சரணங்கள்.

வஞ்சமாயையாலே மருண்டே னுருக்காலே
அஞ்சலென்றென் மேலே அன்புறுந்தாய்போலே (இந்த)

சிற்பராகங்காளா செய்யமலர்த்தாளா
அற்புததயாளா அம்பிகைமணாளா (இந்த)

திருமலைஜக்கையன் தினந்தினமுமுய்யக்
கருணைசெய்யுந்துய்ய கத்தனேயருள்செய்ய (இந்த)

---

20. இராகம் சுருட்டி தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஜகதீசா உன் தாளிணையே தினம் நம்பினேன்.

அநுபல்லவி.

மிருதோத்திர பக்த சுஜன பாலன பிரணவசுந்தா. (ஜக)

சரணங்கள்.

அருமறைகாணத் தில்லை யம்பலவாண
கருணாகரசுந்தரேச காரணபரிபூரணசம்போ. (ஜக)

கனகசபேசா திருக் கயிலைநிவாசா
ஜனகனதியர் தெளியமோன சாதனமருள்சேதனசம்போ (ஜக)

அமரர்சகாயா வரு ளம்பிகைநேயா
சமரதிரிபுராந்தகசிவ தற்பரானந்தஅற்புதசம்போ (ஜக)

திருமகள்சேரும் வகை செய்தருள்கூரும்
தருணமீதெனையாள் திருமலை ஜக்கயன்பணிமுக்யனேசம்போ (ஜக)

---

21. இராகம் காம்போதி-அடதாளம்

பல்லவி.

எப்படி நிருவகிப்பேன் சின்மய
மாதவனே சிவனே.

அநுபல்லவி.

கற்பிதம்செய்தநீ காக்கவும் கடனும்
அற்புதனே தில்லை யம்பல நடனு (எப்படி)

சரணங்கள்.

தினமுங்கொடிய வாதை செய்தொருக்காலே
மனதைவருத்தும்வஞ்ச மாயையினாலே (எப்படி)

சந்ததந்துன்பமெனில் சகித்திடமுடியுமோ
இந்தத்துயரமெல்லாம் என்றுவிடியுமோ (எப்படி)

இருமலையொருவில்லாய் ஏந்துசெங்கையா
திருமலைஜக்கயன் தினந்தொழுமெய்யா. (எப்படி)

---

22. இராகம் கானடா-அல்லது பைரவி. தாளம் ஆதி

பல்லவி.

கருணாகரா கழல்தந்தெனைநீ காவையனே
கதிவேறில்லை கருணாகரா

அநுபல்லவி.

தருணமிதுவே தமியேனையாள்வாய்
சர்வலோக வாதா ரா வு தா ரா (கருணா)

சரணங்கள்.

அருணசலேசா அமலாவிலாசா
அகண்டபரிபூரண னந்தனே
திருநான்மறையின் சிரமேல்நடனு
தேவாதிதேவா ப்ரபாவா (கருணா)

வஞ்சமாம்ப்ரபஞ்ச மாயாவிகாரா
மருளால்நிதம் மனம்வாடினேன்
செஞ்சடாதரா சிவலோகனே
தில்லைவாழ்நடேசா ப்ரகாசா (கருணா)

வானேதிரு மலைஜக்கயனை
மகிழ்ந்தாண்டருள் மாதேவனே
பானேசெழும் பனிமாமலைப்
பாவையொருபா காநிர்மோகா. (கருணா)

